கணபதி துணை.

# நமச்சிவாயமாலை,

குலசேகரபாண்டியன்

அருளிச்செய்த

# மதுராபுரியம்பிகைமாலை.

திருவொற்றியூர்த்

# திரிபுரசுந்தரிமாலை.

இவை - அஷ்டாவதானம்

பூவை

கலியாணசுந்தரமுதலியாரால்

பரிசோதிக்கப்பட்டு

சென்னை-சூளை

நிரஞ்சனிவிலாச அச்சுயந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டன.

1892௵.

சிவமயம்.

# நமச்சிவாயமாலை.



## காப்பு.

மந்திரநமச்சிவாய
மாலைநான்செப்புதற்குக்
கந்தவேடனக்குமூத்த
கணபதிகாப்புத்தானே.



அருமறையயனுமாலும்
அமரருமுனிவர்தாமும்
முறைமுறைவணங்கியேத்தும்
முதல்வனேநமச்சிவாய. (க)

ஆதியாய்வேதநான்காய்
அடிமுடி தெரியாவண்ணஞ்

சோதியாய்நிறைவாய்நின்ற
துணைவனேநமச்சிவாய. (௨)

இணையடிதேடிக்காணா
ஏழுலகளந்தமாயன்
கணையதாவெயின்முன்றெய்த
கடவுளேநமச்சிவாய. (௩)

ஈட்டியபொருள் போலுன்றன்
இணையடிபணிவார்துன்பம்
வாட்டியசெம்பொன்மேனி
வள்ளலேநமச்சிவாய. (௩)

உமையொருபாகம்வைத்த
உம்பர்கடம்பிரானே
அமைதருமணியேமுத்தே
அண்ணலேநமச்சிவாய. (௫)

ஊனுமாயுயிருமாகி
உள்ளுமாய்ப்புறம்புமாகித்

தாணுவாய்ச்சகத்துக்கெல்லாந்
தந்தையாநமச்சிவாய. (௬)

எழுபிறப்பதனுன்மாழ்கும்
என்னுயிர்கிரங்கிவந்து
பழுதறவாண்டுகொள்ளும்
பரமனேநமச்சிவாய. (௭)

ஏடவிழ்கோதைமாதர்
இளமுலைமயக்கப்பட்டு
நீடுதலொழிக்கவல்ல
நிமலனேநமச்சிவாய. (௮)

ஐயமேற்றுண்டாய்பாதம்
அன்பிலேன்றலைமேல்வைத்த
செய்யனேவானோர்போற்றுந்
தேவனேநமச்சிவாய. (௯)

ஒன்பதுவாயிற்கூட்டில்
ஒடுங்குயிருப்பும்வண்ணம்

பொன்பொதிமலர்த்தாள்காட்டும்
புனிதனேநமச்சிவாய. (க0)

ஓமெனுமெழுத்தினுள்ளே
ஒளியதாய்விளங்குகின்ற
வாமனேகருணைநல்கும்
வள்ளலேநமச்சிவாய. (கக)

ஔவியம்பேசாவண்ணம்
அடிமையைத்தடுத்தாட்கொள்ளுந்
திவ்வியமணியேமுத்தே
தேவனேநமச்சிவாய. (கஉ)

அக்கினிப்பூண்டுகொண்டே
அரியவெண்ணீறுபூசுஞ்
சொக்கனேசொக்கர்மேனித்
தூயனேநமச்சிவாய. (கங)

கம்பமார்களிறுரித்த
கச்சியேகம்பாசெம்பொன்

அம்பலத்தாடுகின்ற
அண்ணலேநமச்சிவாய. (கச)

நகரம்போல்வளைந்துழன்று
நாயினேனுணவுதேடும்
பகரொணாவின்னதீர்க்கும்
பரமனேநமச்சிவாய. (கரு)

சத்தியுஞ்சிவமுமாகித்
தாணுவாய்ச்சகத்துக்கெல்லா
முத்தியேயளிப்பாயாதி
முதல்வனேநமச்சிவாய. (சசு)

ஞமனுடனிந்திரற்கும்
நாரணற்காரணற்குஞ்
சமனுறமுதலாய்நின்ற
தாணுவேநமச்சிவாய. (கஎ

இடவியகபாலமேந்தி
எழிரண்டுலகமெல்லாந்

தடவியுங்காணவொண்ணுச்
சங்காரநமச்சிவாய. (கஅ)

இணங்கியகமலப்பொற்ருள்
இருவருமேத்திநின்று
வணங்கவம்பலத்துளாடும்
வானவர்நமச்சிவாய. (கக)

தண்டமிழ்முனிவன்றன்னைச்
சமமுறத்தென்பாலேவலம்
அண்டரோடயன்மால்காணு
ஆதியேநமச்சிவாய. (உ0)

நஞ்சணிகண்டத்தானே
நதிமதிச்சடையினனே
கொஞ்சுபச்சிளம்பெண்பாகங்
கொண்டவாநமச்சிவாய. (உக)

பண்டுலகளந்தமாலும்
பங்யத்தயனுந்தேடிக்

கொண்டுசென்றறியவொண்ணுக்
குாவனேநமச்சிவாய; (உஉ)

மங்கையோர்பாகம்வைத்து
வளர்பிறைமுடிமேல்வைத்துச்
செங்கையின்மழுமான்வைத்த
தேவனேநமச்சிவாய. (உ௩)

இயக்கருமுனிவர்தாமும்
இருகாங்குவித்துநின்று
வியக்கவம்பலத்திலாடும்
விமலனேநமச்சிவாய. (உ௪)

அாகாசிவனெயென்றும்
அம்பலத்தாடியென்றும்
பாவுவார்துயாந்தீர்க்கும்
பாமனேநமச்சிவாய. (உ௫)

இலவிதழ்மடவார்தங்கள்
வலுக்குரியனுகி

அலமருமென்னையாண்ட
அமலனேநமச்சிவாய. (உ௬)

வளமுறுமங்கைதன்னை
மற்றிடப்பாகம்வைத்தே
ஒளிமதிக்கீற்றைச்சூடும்
ஒருவனேநமச்சிவாய, (உ௭)

அழகியமுருகனுக்கோ
ராறுமாமுகமுங்கூர்மை
பழகியவேலுமீந்த
பரமனேநமச்சிவாய. (உ௮)

இளமையுமூப்புமில்லா
இறைவனேயெப்பிரானே
வளமையாங்கருணைமோன
வள்ளலேநமச்சிவாய, (உ௯)

அறவனேபாதந்தேடி
அன்றிருவோருங்காணு

இறைவனேயென்னைக்காக்கும்
ஈசனேநமச்சிவாய. (௩௰)

அனந்தலினின்ருள்போற்றி
அருச்சிக்குமடியார்தங்கள்
இனந்தனிலென்னைவைப்பாய்
ஈசனேநமச்சிவாய. (௩௧)

கரியுரியதனைப்போர்த்துக்
கபாலமுங்கையிலேந்தித்
திரிபுரதகனஞ்செய்த
தேவனேநமச்சிவாய (௩௨)

காலனையுதைத்தகாலா
காமனையெரித்தகண்ணா
பாலனைக்கறியதாக்கும
பரமனேநமச்சிவாய. (௩௩)

கிளிமொழிகிடைநேர்செவ்வாய்க்
கௌரியைப்பாகம்வைத்த

ஒளிமதிச்சடையினானே
யொருவனேநமச்சிவாய. (௩௪)

கிண்டுவெற்பெடுத்தவீரக்
கேடிலாவரக்கன்றன்னை
மாண்டுகவிரலாலூன்று
வள்ளலேநமச்சிவாய. (௩௫)

குழைகுமிழடருங்கண்ணாள்
கோதையைப்பிரிந்தபோது
பிழைசெயுமதனைக்காய்ந்த
பிஞ்ஞகாநமச்சிவாய (௩௬)

கூவிளமறுகுதும்பை
கொன்றைவெள்ளெருக்கூமத்தை
மேவியசடையினானே
வித்தகாநமச்சிவாய. (௩௭)

கங்கையைச்சடைமேல்வைத்துக்
கௌரியைப்பாகம்வைத்த

அங்கணநீதியோசொல்
ஐயனேநமச்சிவாய. (ந௲அ)

கேசுவன்வணங்கிக்கண்ணுங்
கேழ்கிளர்கஞ்சஞ்சூட்ட
ஆசியோடாழியீந்த
அறவனேநமச்சிவாய. (ந௲கூ)

கைச்சிலைமேருவாக
கரியமால்பகழியாக
உச்சிதப்புவித்தேரூரும்
ஒருவனேநமச்சிவாய. (௪0)

கொற்றவன்றனக்குமுன்னே
குதிரையிலேறிக்காட்டிப்
பொற்றுகில்கோலாற்கொள்ளும்
பூரணநமச்சிவாய. (௪க)

கோணமாமலையில்வாழுங்
கோதிலாவாதியேநீ

ஆணல்லைபெண்ணுமல்லை
அத்தனேநமச்சிவாய. (சஉ)

சந்திரன்விளக்குஞ்சென்னித்
தலைவனேதம்பிரானே
இந்திரனிமையோர்போற்றும்
இறைவனேநமச்சிவாய. (சங)

சாந்தணிமுலையாடன்னைத்
தன்புனலெனப்பேர்மாற்றி
ஏந்துசெஞ்சடையெம்மானே
இறைவனேநமச்சிவாய, (சச)

சிரமதுகையிலேந்திச்
சிரியமுனிவர்தங்கள்
விரகினையழித்தமேரு
வில்லியேநமச்சிவாய. (சரு)

சீதளகமலவாவித்
திருநாவலூரன்றன்னைச்

சாதனங்காட்டியாண்ட
தாணுவேநமச்சிவாய. (சசு)

சுத்தவெண்ணீறுபூசிச்
சுடலையினடனமாடும்
அத்தனேயாரூர்வாழும்
அண்ணலேநமச்சிவாய. (சஎ)

சூரியன்றுயரந்தீர்த்தாய்
தோன்றிமுப்புரத்தைச்சுட்டாய்
ஆரியவெள்ளிவெற்பின்
அத்தனேநமச்சிவாய. (சஅ)

செஞ்சிலைக்கையிலேந்திச்
சிரித்துமுப்புரமெரித்தாய்
தஞ்சமென்றுனையடைந்தேன்
தாணுவேநமச்சிவாய. (சகூ)

சேதனவடியாரோடு
திருப்பெருந்துறையில்வந்து

வாதவூரனைமுன்னுண்ட
வாதனேநமச்சிவாய (ருo)

சைவனேயைம்புலன்க
டமைமனஞ்சாராவண்ணங்
கைவரமருளவேண்டுங்
கடவுளேநமச்சிவாய. (ருக)

சொரிமலர்க்கொன்றைதும்பை
சொல்லியவறுகுதானி
விரிமலர்ச்சடையாய்வெள்ளி
வெற்பனேநமச்சிவாய (ருஉ)

சோலைசூழாலவாயிற்
சோதியேநமனேமாய்க்கப்
பாலருவாயினார்க்காப்
பரிந்தருணமச்சிவாய. (ருங)

தந்தையுந்தாயுமில்லாத்
தாணுவேயாண்பெண்ணல்லாய்த்

இந்திரனயன்மால்போற்றும்
இறைவனேநமச்சிவாய, (௫௪)

தாதவிழ்கொன்றைதும்பை
சங்கொடுதலையுங்கொண்ட
நாதனேவேதமோது
நண்பனேநமச்சிவாய. (௫௫)

திரிபுரமெரித்தமூர்த்தி
தென்னவன்முன்னேமுன்னாள்
நரிதனைப்பரியதாக்கு
நம்பனேநமச்சிவாய. (௫௬)

தீதிலாவாதவூரர்
செம்மைகண்டுளமகிழ்ந்த
நாதனேபரனேவானோர்
நண்பனேநமச்சிவாய. (௫௭)

துணைவனேயன்பர்தங்கள்
துன்பறுத்தருளுமூர்த்தி

பணிமுலையுமையாள்பாகா
பரமனேநமச்சிவாய. (ருஅ)

தூதுசுந்தரற்காச்சென்ற
சோலைசூழாரூரையா
ஆதியேயரனேவெள்ளி
யசலனேநமச்சிவாய. (ருக)

தென்னவனுகக்கூடல்
சேர்ந்துசெங்கோல்செலுத்தி
அந்நகர்தன்னையாண்ட
அமலனேநமச்சிவாய. (சூ0)

தேடியேயிருவர்காணுத்
திருவடிமனத்துள்யாரும்
நாடியேவணங்கநின்ற
நம்பனேநமச்சிவாய. (சூக)

தையலோர்பாகம்வைத்துச்
சடையிலேகங்கைவைத்த

ஐயனேயாரூர்வாழும்
அண்ணலேநமச்சிவாய. (சுஉ)

தொல்லுலகெல்லாம்போற்றுஞ்
சோதியேசூலபாணி
வில்லெனமேருவாங்கும்
வித்தகாநமச்சிவாய. (சுங)

தோத்திரஞ்செம்புமாற்குச்
சுடரொளியாழியீந்த
ஆத்தனேயடியாரன்பிற்
களியனேநமசிவாய. (சுச)

நஞ்சினையருந்திமாய
னான்முகன்முதலோர்நாண
அஞ்செழுத்துருவமான
அத்தனேநமச்சிவாய. (சுரு)

நாரணனலரோனிந்த்ரன்
நாடிமுன்வணங்கிநின்றே

ஆரணமோதுகின்ற
ஆதியேநமச்சிவாய. (௬௬)

நிற்பவர்நெறியைநோக்கி
நெஞ்சைவிட்டகலாதானே
கற்பனைகடந்தசோதிக்
கடவுளேநமச்சிவாய. (௬எ)

நீறணிமேனியானே
நிமலனேயமார்கோவே
ஆறணிசடையினானே
அண்ணலேநமசிவாய. (௬அ)

நுண்ணிடைமாதுபாகா
நோக்குவார்தம்மைநோக்குங்
கண்ணுதற்பரனேயெங்கள்
கடவுளேநமச்சிவாய. (௬௯)

நூபுரபதமாதோடு
நுவலருஞ்சபையிலாடும்

மாபுரத்தவர்கள்காலா
வானவாநமச்சிவாய. (எ0)

நெஞ்சகமலரிலுன்னை
நினைவறநினைந்தபேருக்
கஞ்சலென்றருளிச்செய்யும்
அண்ணலேநமச்சிவாய. (எக)

நேத்திரந்தன்னால்வேளை
நெருப்பழசுட்டுவிட்டாய்
சாத்திரமுனிவோர்போற்றுந்
தாணுவேநமச்சிவாய. (எஉ)

நைந்துனைநினைப்பார்பாவம்
நாசமதாக்கிநிற்பாய்
பைந்தொடிபாகங்கொண்ட
பரமனேநமச்சிவாய. (எ௩)

நொந்தவரினைத்தோர்தம்மை
நொடியளவினில்வாழ்விக்கும்

கந்தரங்கறுத்தமூர்த்தி
கடவுள்ளநமச்சிவாய. (எச)

நோக்கமுன்றுடையாயென்னை
நோக்கிபேதுரியாதீதத்
தூக்கத்தில்வைப்பதென்றோ
சொல்லுவாய்நமசிவாய. (எரு)

நவ்வியையேந்துங்கையாய்
நயமுடனடியார்தங்கள்
வெவ்வினையெல்லாந்தீர்க்கும்
விமலனேநமச்சிவாய. (எசு)

பத்தராய்ப்பணிவார்தம்மைப்
பதங்கொடுத்தாளுமையா
சுத்தனேவேதஞ்சொன்ன
துணைவனேநமச்சிவாய. (எஎ)

பாடுவார்மூவர்தம்மைப்
பதங்கொடுத்தாண்டமூர்த்தி

தேடுவார்தேடுகின்ற
செம்பொனேநமச்சிவாய. (எஅ)

பிறையணிசடையினானே
பின்னுகாவடியர்க்கெல்லாங்
குறைவறவாழ்வளிக்குங்
கொற்றவாநமச்சிவாய. (எகூ)

பீடுறப்பூசிப்பார்தம்
பெருவினையறுக்குமூர்த்தி
ஆடல்சேரெருதிலேறும்
அண்ணலேநமச்சிவாய. (அ0)

புகலறுங்கல்லாலன்பு
பூண்டெறிசாக்கியர்க்குத்
தகவுறமுத்திநல்குந்
தாணுவேநமச்சிவாய. (அக)

பூசுவெண்ணீறுபொங்கப்
பொருவிலாவம்மைகாண

நேசமோடாலங்காட்டில்
நிருத்தஞ்செய்நமச்சிவாய. (அஉ)

பெண்ணமுதனையார்நாளும்
பெட்புறுவளையுந்தூசும்
எண்ணுறுபலியாக்கொண்ட
இறைவனேநமச்சிவாய. (அங)

பேயுடன்காட்டிலாடும்
பிஞ்ஞகாபெரியோர்தங்கள்
தூயநன்மனத்துளான
சுத்தனேநமச்சிவாய. (அச)

பையரவணையிற்றுஞ்சும்
பாரளந்தோர்க்குப்பாதி
மெய்யளித்தருள்கூர்ந்திட்ட
விண்ணவாநமச்சிவாய. (அரு)

பொசியுறுதேம்பூஞ்சோலைப்
புகலிவாழ்பிள்ளையார்க்குச்

சசியொளின்முத்தின்பந்தல்
தந்தவாநமச்சிவாய. (அசு)

போதகமாகிவந்த
புன்மைசோரக்கன்றன்னை
நோதகவுரித்துப்போர்த்த
நுண்ணியாநமச்சிவாய. (அஎ)

பௌத்திற்சிலையோடாழும்
படியமண்செய்யவப்பர்க்
கெவ்வமதகற்றிப்பேற
தீந்தவாநமச்சிவாய. (அஅ)

மறுவறுமாதிசைவ
ம்ரபிற்சுந்தரர்க்குத்தூதாய்ச்
செறிநிசிபரவைவாயிற்
சென்றவாநமச்சிவாய. (அகூ)

மான்மழுக்கையிலேந்தி
வன்னியோர்பாகம்வைத்தே

ஆன்மிசையேறுஞ்சோதி
ஐயனேநமச்சிவாய. (கூ0)

மிடற்றினிற்காளகூட
விடத்தினைக்கறுக்கவைத்தாய்
நடத்தினில்விருப்பம்வைத்தாய்
நம்பனேநமச்சிவாய. (கூக)

மீனெனவந்தமாயன்
விழியினையிடந்துசாத்த
ஆனதோர்மேனிநல்கும்
அண்ணலேநமச்சிவாய. (கூ௨)

முன்னமேபிரமன்றன்னை
முனிந்ததோர்தலையறுத்தாய்
என்னைவந்தாண்டுகொள்வாய்
ஈசனேநமச்சிவாய. (கூஙு)

மூர்க்கனுந்தக்கன்வேள்வி
முன்புசென்றழித்துவெற்றி

மார்க்கங்கண்டிட்டசோதி
வானவாநமச்சிவாய. (கூச)

மெலிவிலாத்தவத்தோர்கோப
மேலுறமுன்னாள்விட்ட
புலிதனையுரித்துப்போர்த்த
புண்ணியாநமச்சிவாய. (கூரு)

மேயபேருணர்விற்கெட்டா
வெளியதாயணுவுமாகி
ஆயசிற்சொரூபமான
அண்ணலேநமச்சிவாய. (கூசா)

மையுறுகுழலாள்கூடன்
மங்கையர்க்கரசியார்முன்
செய்யுறற்பணிக்குவந்த
தேவனேநமச்சிவாய. (கூஎ)

மொழிதருநால்வர்தங்கள்
முதுமறைத்தமிழ்ப்பாமாலை

ஒழிவின்றிச்சூடிக்கொள்ளும்
ஒருவனேநமச்சிவாய. (கூஅ)

மோகினிவடிவங்கொண்ட
முகில்வண்ணன்றன்னைச்சேர்ந்து
சோகமிலையனைத்
தோற்றியோய்நமச்சிவாய. (கூகூ)

மௌவலங்குழலார்மோக
வலையறுத்துயர்சித்தாந்தச்
செவ்விதாமுத்தியென்று
சித்திக்கும்நமச்சிவாய. (க00)

நமச்சிவாயமாலை- முற்றிற்று



பராசத்திதுணை.

# அம்பிகைமாலை.



## காப்பு.

### கட்டளைக்கலித்துறை.

நடக்குந்திருவிளை யாட்டோரறுபத்
து நாலுஞ்சொக்க னடக்குந்தென்கூட
லிலம்பிகைமாலையை யாறினுக்குத்,தட
க்கும்பகம்பச் சிறுகட்புகர்முகத் தால
வட்ட, முடக்குந் தடக்கை யொருகோ
ட்டுவாரண முன்னிற்கவே.

திருவேவிளைந்த செந்தேனேவடி யி
ட்டதெள்ளமுதி, னுருவேமடப்பிள்ளை
யோதிமமேயொற்றை யாடகப்பூந்,தரு
வே நின்றுமமைத் தாளேசரணஞ் சரண
ங்கண்டா, யருவேயணங்கரசே மதுரா
புரி யம்பிகையே. (க)

நாட்கொண்டகொங்கைத் துணையும் பொன்னேலையுநஞ்சிழைத்த, வாட்கொண்ட நாட்டமுந் தொண்டைச் செவ்வாயுமருங்குடுத்த, தோட்கொண்ட செம்பட்டு முத்தாரமுங்கொண்டு தோன்றியென்னை, யாட்கொண்ட நாயகியே மதுராபுரி யம்பிகையே. (உ)

கரும்புங் கணையைந்தும் பாசாங்குசமுங் கைக்கொண் டடியேன், றிரும்புந் திசைதொறுந் தோற்றுகண் டாயிசை தேக்குமணிச், சுரும்புண்ட காவியுஞ் சோதிநிலாவின் றுளிருஞ்சற்றே, யரும்புங்கனங் குழலாய் மதுராபுரி யம்பிகையே. (௩)

வடக்குன்றமேருவு மூதண் டமட்டும் வளர்ந்துபுறங், கிடக்குங்கடலும்புவனங்களேழுங் கிளர்மருப்புத், தடக்குஞ்

சரமெட்டு மெல்லாந்திருவுந்தித் தாம
ரையி, லடக்கும் பராசத்தியே மதுரா
புரி யம்பிகையே. (௪)

ரோக்குங்கருணை விழியாற்பொதுவ
றநோக்கியென்னைக், காக்கும்படிக்குக்க
ருதுகண்டாயொளி கக்குநிலா.வீக்குஞ்
சடாடவி யானுண்டகாள விடத்தைய
தாக்குஞ் சிவானந்தியே மதுராபுரியம்
பிகையே. (௫)

ஒளிகொண்டவெண்பிறைத் தோடும்
பொன்மேனியு மூறியதேன், றுளிகொ
ண்டசெங்கனிவாயுமுத்தாரமுந் தோளு
மென்றன், களிகொண்டநெஞ்சங் குடி
கொண்டவாவிசை கக்கும்வரி, யளிகொ
ண்ட பூங்குழலாய் மதுராபுரி யம்பி
கையே. (௬)

பொடிபட்டபிட்டுக்குத் தோள்கொண்டகூடைமண் போட்டுப்பொங்கி,வெடிபட்டவைவை யடைத்தவந்நாள்சொக்கன்மேனிசற்று, கொடிபட்டபோதுமுழுநீலக்கோமள மேனியினு, மடிபட்டதோ வணங்கே மதுராபுரி யம்பிகையே. (எ)

விளையுங்கருக்குழி வீழாமலென்றன் வினைப்பிறவி, களையும் படிப்பதங் காட்டுவையோகமுநீரைவென்று, வளையுந்தரள மணித்தோடமுத்திய வள்ளையைச்சென், றளையுங்கயல்விழியாய் மதுராபுரியம்பிகையே. (அ)

போர்க்குங் கலாமதி யுங்கொன்றை மாலையும் பொன்முடிமேற், சேர்க்குந்தலைவன்முன் செல்லுமப்போது திரண்டமுத்தின், வார்க்குங்குமக் கொங்கை

யானைக்கதிர்மணிமாமுரச, மார்க்கும்பரி
புரத் தாய்மதுராபுரி யம்பிகையே. (௯)

ஒழியாப்பனித்தடங் கண்ணீர்ததும்
பவந் துன்னடிக்கே, பொழியாப்புதும
ல ரிட்டுநிற்பார்க்குப் பொழிகருணை,வி
ழியாற்சுரப்ப வலர்ந்தசெந்தாமரை வீடு
மென்று, மழியாப்பதந்தரு வாய்மதுரா
புரி யம்பிகையே. (௧0)

நாரணன்கொஞ்சும்புகழ்நான்முகற்கு
ம்பொன்னுட்டவர்க்குங்காரணங்கொஞ்
சுமுன் சிற்றடியேன்றிசை கட்டுமெட்
டு, வாரணங்கொஞ்சுங் கடம்பாடவின்
மகிழ்நனுட, ஞரணங்கொஞ்சுமம்மேம
துராபுரி யம்பிகையே. (௧௧)

ஊடும்பொழுதுங் கருணைவிடாம லு
ளைப்பவர்தோட், கூடுந்தொழிலை மறப்
பதென்றோநறைக்கொன்றையந்தார், கு

டுந்தலைவன் றிருமார்பில்வாரி சொரிதா
ள, மாடுந்துணைமுலையாய் மதுராபுரியம்
பிகையே. (௧௨)

கொடிகொண்டசிற்றிடை யார்மணி
நூபுரங் கொஞ்சுமடிப்,பொடிகொண்ட
சென்னியிற் கால் வைக்குமோ புற்றா
வெடுத்து, முடிகொண்டசொக்கனழியா
விரத முடிக்க வென்றே, யடிகொண்ட
பூண் முலையாண் மதுராபுரி யம்பிகை
யே. (௧௩)

பொருந்துகயல்விழி மாதர்களாசைப்
புணரில்யான், வருந்துந் துயரென் றொ
ழிப்பைகொல்லோ மணப்பந்தரிலே, தி
ருந்துங் காம்பற்றி நிற்பான் திருமுகச்
செவ்வியெல்லா, மருந்துந்துணைவிழியா
ய் மதுராபுரி யம்பிகையே. (௧௪)

பொன்னேநவமணி யேயமு தேபுவி பூத்தடங்கா, மின்னேயளிவைத்தமெய்ப்பொருளேகப்பு வேலையென்மேலெந் நேரங்காலன் விடுத்தாலுநீயிறு கையமர்த்தி, யந்நேரம்வந்தளிப்பாய்மதுராபுரியம்பிகையே. (கரு)

நுங்கேள்வர்பாகத்து மங்காதநான்மறை நூலிடத்துங்,கொங்கேய்பொகுட்டுக் கமலா லயத்துங் குடி கொண்டுமற்றெங்கேயிருக்கினு நாயடியடியேனுக்கிடர்வரும்போ, தங்கேவெளிப்படுவாய் மதுராபுரி யம்பிகையே. (கசா)

இணங்கேனொருவரைநின்னிரு தாளன்றி யெப்பொழுதும், வணங்கே னொருவரை வாழ்த்துகிலேனெஞ்சில் வஞ்சகர்பாற், பிணங்கேனமிர்தம் பெருகுஞ்

சிறிய பிறைமுடித்த, வணங்கே சரணங்
கண்டாய் மதுராபுரி யம்பிகையே. (௧௭)

குன்றேயெனுமுலை யார்தருங்காதற்
கொடுமையெலாம், வென்றேன்வெகு
ளியை விட்டுவிட்டேன்விரைத் தாமரை
த்தா, ளின்றேயென்சென்னிவைத் தா
யினியான்செயு மேவலெல்லா, மன்றே
யுன்னேவல் கண்டாய்மதுராபுரி யம்பி
கையே. (௧௮)

வடிவைத்தவேல்விழியாரனுராகமயக்கி
ற்சென்று, குடிவைத்தநெஞ்சென்று மீ
ளுங்கொலோவன்பு கொண்டதொண்ட
ர், முடிவைத்தவாறென் முடைத்தலை
மேற்றுய்ய முத்தின் றண்டை, யடி
வைத்தகோமளமேமதுராபுரி யம்பிகை
யே. (௧௯)

நெளிக்கும் புழுமொய்த்து மேயுங் குரம்பையி னின்றுமுயி, ரொளிக்கும் பொழுதுவெளிப்படுவாயண்ட முண்ட வண்ண, றளிக்குங்கருணையிற்சூல்கொண்டு லாவித்தொடர்ந்துபடர்ந், தளிக்கும் பசுங்கொண்டலே மதுராபுரி யம்பிகையே, (௨0)

உலைகுதிக்குந்தழ லூறியகானலையுண் ணச்சென்று, கலைகுதிக்கும்படி போலுழன்றேன்கழிச் சேல்வெருண்டு வலை குதிக்குஞ்செங் கழுநீருடைந்துவழிந்த செந்தே, னலைகுதிக் குந்தடஞ்சூழ்மதுராபுரியம்பிகையே. (௨௧)

ஏலமடங்குங் குழலாற்குற் றேவலி லெய்த்தடியேன், காலமடங்குமுன் வந்துநிற்பாய்வின் கடந்துநின்ற,கோலமட

ங்கு மறியாதபச்சைக் குழவியைப்போ,
லாலமடங்குமம் மேமதுராபுரி யம்பி
கையே. (உஉ)

கொஞ்சுங்கிளிமொழி யார்க்கன்பு பூ
ண்டு குலையுமென்ற, னெஞ்சும் பொற்
பாத நினைப்பதுண்டோவெண் ணிலாம
தியின், பிஞ்சுங்கழைவில்லு மங்குசபா
சமும் பிச்சிமலாஞ்சுந் தரித்தவளே ம
துராபுரி யம்பிகையே. (உ௩)

செழுந்துங்கக் கொங்கையு முத்தா
மும்பொற் சிலம்புந்திங்கட், கொழுந்
தும் மகரக்குழையு மெல்லாம் வண்டு
கோடிசுற்றி, யுழுந்தும்பைசூடுந் திரு
மேனியுமுன் னுடனுமொன்றா, யழுந்
தும் பொழுதுமுண்டோ மதுராபுரி ய
ம்பிகையே. (உச)

பூண்டகைவாரிப் புதுமலர் தூவிநின் பொன்னடிக்கே, கூண்டகைசென்னி குவிக்கப்பெற்றேன் பிறைக் கோடணிந்த, நீண்டகைவேழப் பிடரேறிவட்ட நிலம்புரக்கு, மாண்டகையேயணங் கேமதுராபுரி யம்பிகையே. (௨௫)

கணையுங்குமிழு மிணைநெடுஞ்சாபமுங் காரும்வள்ளைத், துணையும்பவளமுஞ் செவ்விளநீருந் துவண்டபச்சைப், பணையும்பனித்தடங் காந்தளும் பாந்தளும் பத்துமொன்று, மணையுந்திருவுருவேமதுராபுரி யம்பிகையே. (௨௬)

இணைக்கும்ப மென்முலை யார்விழி வேலுக்கு மெய்யுமதன், கணைக்குந்தனியிலக் காய்விடவோமணிக் கச்சகலாத், துணைக்கும்பமென்முலை யாற்சொக்

கன்மேனி துவளக்கட்டி, யணைக்குஞ்ச
தானந்தி யேமதுராபுரி யம்பிகையே.

மழைக்குந்தளமட வார்தருங்காதல்
வலைத்தலைப்பட், டுழைக்குஞ் சழக்கனை
க் காப்பதுண்டோவிரண் டேசன்மணிக்,
குழைக் குங்காந்த சுரும்பையெல்லாங்
குழை யூடேடங், தழைக்குங் கயல்விழி
யாய்மதுராபுரி யம்பிகையே: (௨அ)

முலைக்கேயவசத் தொழில்விளைப்பா
ரின்ப மோகமெனும், வலைக்கேயகப்ப
ட் டழுந்திவிடாமல் வலியவந்தென், ற
லைக்கே பதம்வைத்த தண்ணளியேமுத்
தங் தத்துதிரை, யலைக்கே விழிதுயில்
வாய்மதுராபுரி யம்பிகையே. (௨௯)

மணியுந்தளவமும் வெண்ணகையோ
வழி மூவர்செய்யத், துணியுந்தொழிலு

முன் செய்தொழிலோபத்தித் தூத்தி முடிப், பணியுஞ்சுருளுங்கடலேழுநின் கரப் பங்கடத்தி, லணியுஞ் சிறுவளை யோமதுராபுரி யம்பிகையே. (ளு0)

துதிகவி.

பிடித்தாரக்கட்டி யணைத்தமு தூட்டி ய பேயினுயிர், குடித்தாடுமாயன் குல சேகரன்வட குன்றைச்செண்டா, லடி த்தானியற்றிய வம்பிகைமாலையையாறு கவி, படித்தார்கள்கற்பகக் காவும்பொ ன்னுடும் படைப்பவரே.

அம்பிகைமாலை-முற்றிற்று.



கணபதிதுணை.

# திருவொற்றியூர்த்
# திரிபுரசுந்தரிமாலை.



கார்கொண்ட கூந்தலு மின்னார்முக
முங் கயல்விழியும், வார்கொண்ட கொ
ங்கையுங் காந்தளங்கையுமணியிடையும்
ஏர்கொண்டபாதமுங் காணநிதமு மெ
னக்கருள்வாய், சீர்கொண்ட மாவொற்
றி யூர்வாழ் திரிபுர சுந்தரியே. (க)

மானேமரகத மேயன்னமேநவ மாம
ணியே, வானேயொளிதரும்பொற்கொ
டியே வளர்மாதங்கியே, கானேர்மொ
ழியணங்கே யின்பமேயருட் கண்மணி
யே, தேனேதிருவொற்றி யூர்வாழ்திரி
புர சுந்தரியே. (உ)

முத்தேதெளிந்த வமுதேயிலகு மு ழுமறையின், வித்தேசிவாநந்த மெய்ப் பொருளேவிரைமேவுமலர்க், கொத்தே யிளங்குயிலே யிமவான்பெற்ற கோம ளமே, சித்தேதிருவொற்றி யூர்வாழ்தி ரிபுரசுந்தரியே. (௩)

காடுஞ்செடியு மலையுங்குகையுங் கல ந்தபல, நாடுந்திரிந்தே னுனைநினைந்தால் வரு நற்கதிதான், கூடுந்தவநிலை ஞான முஞ்சேருங் குவலயத்தோர், தேடுந்தி ருவொற்றி யூர்வாழ்திரிபுர சுந்தரியே.

பூவேபப்பூவின் மணமேமறை மொ ழிப்பூங்கிளியே, கோவேநிறையருட்கு ன்றே மெய்ஞ்ஞானக் குணக்கடலே, பாவே பழம்பொரு ளேசச்சிதா நந்தப் பைந்தருவே, தேவேதிருவொற்றி யூர் வாழ்திரிபுர சுந்தரியே. (ரு)

பழிக்குங்கயவ ரிடத்தேநிதஞ்சென்
று பாரினிற்றேன், கொழிக்குங்கடலெ
னச்செந்தமிழ்ப்பாடிக்குவிந்தலைத, லொ
ழிக்கும்படிவர மென்றருள்வாய் செல்
வ மோங்கிவளஞ், செழிக்குந் திருவொ
ற்றி யூர்வாழ்திரிபுர சுந்தரியே. (சு)

அளிகோதையார்மய லான்வனம்வா
டி யகம்வருந்தி, விளிவேனை யாட்கொ
ண்டருள்புரிவாயுயர் மெய்ப்பொருளி,
ஞெளிவேநல்லன்பர் மனத்தாமரைவள
ரோதிமமே, தெளிவே திருவொற்றி
யூர்வாழ்திரிபுர சுந்தரியே. (எ)

பிறக்குங்கடலி லழுந்தாமன் ஞான
ப்பெருஞ் சுழியாய், திறக்கும்வழிதனை
க் காட்டியமுதஞ் செறிந்துபொங்கிக்,
கறக்குங்கமலத் திடத்தேயென்னெஞ்ச

ங், கருதவைப்பாய் சிறக்குந் திருவொ
ற்றி யூர்வாழ்திரிபுர சுந்தரியே. (அ)

இகழுமுலுத்தரைச் சிந்தாமணிக்கி
ணை யென்னவென்றும், புகழுமென்னெ
ஞ்சமுன் பொற்பதந்தன்னைப் புகழவரு
ள், நிகழுமனோன்மணி வாழபிராமி நிம
லிசெல்வந், திகழுந்திருவொற்றியூர்வா
ழ்திரிபுர சுந்தரியே. (கூ)

காப்பாயெனையென்றுங் கன்னிகபா
லி கடைக்கண்ணினாற், பார்ப்பாயுலகம்
பதினாலொடியாவும் படைத்தளிக்குஞ்,
சீர்ப்பாவையேயருண் முக்கண்ணியேசி
றியேன்வினையைத்,தீர்ப்பாய்திருவொற்
றி யூர்வாழ்திரிபுர சுந்தரியே. (க0)

மருவார்மலர்க்கணை பாசாங்குசமொ
டுமோமதூரங், தருவாரிளம்பைங் கருப்பு

வில்லேந்துந் தடக்கையின்னே, கருவா
ரியிலமுந் தாமலைனையென்றுங் காத்தி
டுவாய், திருவாழ்திருவொற்றி யூர்வாழ்
திரிபுர சுந்தரியே. (கக)

காரார்குழலணங் கேயபிராமி யென்
கண்மணிபூந், தாராரிளங்கொங்கை யம்
பிகைவாமிநற் றற்பரையே, யோரார்சவு
ந்தரிமாதங்கிவாலைசொல் லிந்திரையே,
சீரார்திருவொற்றி யூர்வாழ்திரிபுர சுந்
தரியே. (கஉ)

கனமும்புகழும் பெருமையு மெய்த்
தவக்காட்சியுநன். மனமுந் தருந்தெய்வ
நின்னிற்பிறிதிலை மாநிலத்திற்,சினமும்
பவமும் வறுமையுந்தீர்த்தருள் செய்தி
டுவாய்,தினமுந்திருவொற்றி யூர்திரிபுர
சுந்தரியே. (கங)

நல்வந்தனையுனக்கேசெயுகாட்டத்தை நல்கிடுவாய், வில்வந்தனையணிந் தானிடமேவிய வித்தகியே, யில்வந்தனையெனைக்காத்தருள்வாயென்று மின்பநிறை,செல்வந்தருமொற்றி யூர்வாழ்திரிபுர சுந்தரியே. (கச)

ஆரும்பரவு மகிலாண்டநாயகி யாரணங்க, ளோரும்பரஞ்சுட ருண்மணியே யென் னுளத்துயரந், தீரும்படிக்கரு டந்தெனையாட்கொ டிகழ்பவளஞ், சேருந் திருவொற்றி யூர்வாழ்திரிபுரசுந்தரியே.

மெய்வாய்கண்காதொடு மூக்கெனப் பேர்பெற்ற வெய்யவினை, யைவாய்வழிச்சென்றலையா மன்ஞான வரும்பொருள்சேர்ந், துய்வாயெனவிப் புவிமீதிலே யெனக் குண்மையருள், செய்வாய்திருவொற்றி யூர்வாழ்திரிபுர சுந்தரியே.

முத்திதருந்திரு வாசகமேயன்பர் மூதறிவே, புத்திதருங்கலை மாமகளேயன்ன பூரணியே, பத்திதரும்பர மானந்த வெள்ளப் பராபரியே, சித்திதருமொற்றியூர்வாழ்திரிபுர சுந்தரியே. (கஎ)

கயலேகண்ணென்றுமலையேமுலையென்றுங் கன்னியர்பான், மயலேகொண்டேங்கித் திரியாமலேயுனை வாழ்த்துமன்ப, ரயலேவிளங்கு மமுதேயுலகங்களியாவுமுன்றன், செயலேதிருவொற்றியூர்வாழ் திரிபுர சுந்தரியே. (கஅ)

பொன்னார்மணிவண்ணன் மாமலர்மீதுறை போதன்மதி, மின்னார்சடையனும் போற்றும்புராதனி வேதங்கட்கு முன்னார்சவுந்தரி யாநந்தநாயகி முச்சுட

ரே, தென்னூர்திருவொற்றி யூர்வாழ்தி
ரிபுர சுந்தரியே. (கக)

அருவேயருவுரு வேயறிவேயென்ன
கத்துள்வளர், தருவேதருமல ரேதற்ப
ராநந்த தன்மயமே, குருவேகுருவரு
ளேகுணமேநற் குணக்கடலே, திருவே
திருவொற்றி யூர்வாழ்திரிபுரசுந்தரியே.

அம்மைபுவனை வடிவுளநாரணி யாம
ளையே, மும்மையுலகும்படைத்தருளம்
பிகை முக்கணியே, வெம்மையகற்றி யு
னதருளாநந்த வீடருள்வாய், செம்மை
திருவொற்றி யூர்வாழ்திரிபுரசுந்தரியே.

பரிந்தேனுனைக்கண்டு பாரினுலுத்தர்
கள் பண்பைவிட்டேப், பிரிந்தேனகமகி
ழ்ந்தேனினிமேற்பி றப் பில்லையென்றே
திரிந்தேன்சிவகலை பாய்ந்துகொண்டே

னிலை சேரும்வழி, தெரிந்தேன் திரு வொற்றி யூர்வாழ்திரிபுர சுந்தரியே.

மடஞ்சேரெனது மனத்தேகுடிகொண்ட வல்லிமணிப், படஞ்சேரரவப் பணியானும்வேதனும் பாற்கடலி, னிடஞ்சேர்முகுந்தனு முன்செயலன்றி யிலங்குவரோ, திடஞ்சேர்திருவொற்றியூர் வாழ்திரிபுர சுந்தரியே. (உரு)

பொன்மயமாகிய பூரணநாயகி பூரணத்தின், றன்மயமானசவுந்தரிகாரணிசங்கரியே, மின்மயமானவிமலிபரம விளக்கொளியே, சின்மயமேயொற்றி யூர்வாழ்திரிபுர சுந்தரியே. (உசு)

தற்பரியேசச்சி தானந்தநிட்கள தன்மயமே, பொற்பரிசோதரி சுந்தரிமாலினி பூரணியே, நற்பரிவாலெனை யாட்

கொண்டநாயகி நான்மறைசொற், சிற்ப
ரியேயொற்றி யூர்வாழ்திரிபுரசுந்தரியே

முத்தர்மகிழு முழுமணியேநவ மோ
கனமே, யத்தரிடத்தில் வளரபிராமி
சிவாநந்தியே, யெத்தரிடத்திற் றிரியா
மலேசெல்வ மேதருவாய், சித்தர்மகி
ழொற்றி யூர்வாழ்திரிபுர சுந்தரியே.

மறஞ்சேர்பிறவி வலையான்மயங்கியி
ம் மாநிலத்தி, லறஞ்சேர்வழியை யறி
யாமல்வீணி லலேவருந்த, னிறஞ்சேர்ப
தத்தை நினையாரெவ்வா றுய்வர் நின்மலி
யே, திறஞ்சேர் திருவொற்றி யூர்வாழ்
திரிபுர சுந்தரியே. (உஎ)

முன்பாரளந்தவன் சோதரிசூலி முத
ல்வியெழி, லன்பார்தவத்தினருண்மணி
யேயென யாட்கொள்ளுவா, யென்பாரி

றைவ ரிடத்தேவிளங்கு மிளங்குயிலே
தென்பார்திருவொற்றி யூர்வாழ்திரிபுர
சுந்தரியே. (உஅ)

பண்பார்சுழிமுனைச் சோதியிலேமன
ம் பாய்ந்துருகக், கண்பார்பராசத்தி நா
தசொரூபிகடல்விடத்தை, யுண்பாரிடத்
திலமர்ந்தவளேவளருத்தமியே,திண்பா
ர்புகழொற்றியூர்வாழ்திரிபுர சுந்தரியே.

சுந்தரிதாசன் றுதிக்குந்திரிபுர சுந்தரி
மேற், செந்தமிழாற்சொன்ன பாமாலை
தன்னைத் தினந்தினமு, மந்திரமாகப்ப
டித்தோர்கள்கற்றவர் மாநிலத்தி, லிந்தி
ரபோகமு மெய்ஞ்ஞானமும்பெற் றில
ங்குவரே. (ரு0)

திருவொற்றியூர்த்திரிபுரசுந்தரிமாலை
முற்றிற்று.

---